கழக வெளியீடு: ௬௧௬

79h

# சிவதீக்கை




சித்தாந்த பண்டிதர், கழகப்புலவர்,

திரு. ப. இராமநாத பிள்ளை அவர்கள்

எழுதியது






திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை-1.

முதல் பதிப்பு: பிப்ரவரி, 1954
இரண்டாம் பதிப்பு: மே, 1954

உ

திருச்சிற்றம்பலம்

## திருமுறைச் சிறப்பு

"விடும் ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடி ஞானமென் ஆவதும் எந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன செந்தமிழ் கொண்டிசை
பாடு ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே."

—உ. உ-கக.

"ஆறதே றுஞ்சடை யானருள் மேவ அவனியர்க்கு
வீறதே றுந்தமி ழால்வழி கண்டவன் மென்கிளிமாந்
தேறல்கோ தித்தாறு சண்பகந் தாவிச் செழுங்கமுகின்
தாறதே றும்பொழிற் சண்பையர் காவலன் சம்பந்தனே."

—கக. திருச்சண்-ரு.

"ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச்சொ லாமென்று
ஆனசீர் நமச்சி வாயத் திருப்பதி கத்தை* அங்கண்
வானமும் நிலனுங் கேட்க அருள்செய்திம் மணத்தின் வந்தோர்
ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக என்ன."

—கஉ. திருஞா-கஉசஅ.

திருச்சிற்றம்பலம்

---

* 'காதலாகிக்'—ந. சக-க.

# பதிப்புரை

## மும்மை

நாடு, மொழி, நன்னெறி மூன்றும் ஈடும் எடுப்பும் இல்லாத பீடுடைப் பெரும்பொருள். ஆண் பெண்பாலாராகிய ஒவ்வொரு வரும் எவ்வகை வேற்றுமையும் இன்றி இவற்றை அன்புடன் மேற்கொண்டு இன்பமாக எந்நாளும் ஒழுகுதல்வேண்டும். இம் மூன்றும் முறையே உடல், உள்ளம், உயிர் எனக் கொள்ளுதல் பொருந்தும். இவற்றை மேற்கொண்டு ஒழுகுவார் சிற்சில வரம் பமைத்துப் பற்பலரோடு ஒற்றுமையாய் ஒழுகுதல்வேண்டும். அங்ஙனமே நாம் நம் முன்னோர் காலந்தொட்டு இந்நாள்காறும் ஒழுகி வருகின்றோம்.

## நன்னெறி

இவற்றுள் உயிரனைய நன்னெறியினை மேற்கொண்டு ஒழுகி உய்தற்குக் கைக்கொள்ளவேண்டிய ஒழுங்குகளுள் தலையாயது "சிவதீக்கை". அத்தீக்கை நுழைவு, நோன்மை, நுண்மை என மூவகைப்படும். தீக்கையின்றிச் செய்யும் எச் செயலும் சிறந்த பயனைத் தாராது. எதுபோல் என்றால்? ஆணை (Stamp) பொறிக்கப் பெறாத அஞ்சல் வீண் சுமையாய்ப் பொருள் ஒறுப் பாய்ப் பெரும்பாலும் விடுத்தார்பாலே வந்துறுவதைப் போன்ற தாகும். ஆளுடைய பிள்ளையார், தம் திருமணத்தில் வந்தாரனைவர் கட்கும் திருமுறைவழிச் சிவதீக்கை செய்தருளினர். அதனால் அவர்கள் சிவனடிக்காளாம் சிறப்பு எய்தினர். அவ்வுண்மை "காதலாகி" எனத் தொடங்கும் திருமுறைத் திருப்பதிகத்தா லுணரலாம். ஆளுடைய பிள்ளையார் எனினும் திருஞானசம்பந்த நாயனார் எனினும் ஒன்றே. திருமுறை, திருநெறியதமிழாகிய தேவாரம் முதல் பெரிய புராணம் ஈறாகப் பன்னிரண்டு ஆகும். இவையும், பொருள்நூலாகிய சித்தாந்தம் பதினான்கும் உடலுயிர் கண் அனைய ஒப்பில் அருள்நூல்கள். இவற்றிற்கே செந்நெறிச் செல்வர்கள் முதன்மையும் மூப்புரிமை (Authority) யும் கொடுத் தும், கொடுப்பித்தும் ஒழுகுதல்வேண்டும்.

தீக்கை என்னும் சொல் தீ+கை என்னும் இரு சொற்களின் முதனிலைகள் சேர்ந்து தோன்றும் ஒருசொல். தீ என்பது தீயச் செய்தல். கை செலுத்துதல். எனவே, மலம், மாயை, கன்மங் களின் ஆற்றல்களைப் பயன் பெறாவண்ணம் தீய்த்து, அன்பர் மனத்தை அருள்நினைவால் செந்நெறிக்கண் செலுத்துவது தீக்கை யாகும். தீய்தல் பயனின்றிப் போவது என்பது வயல் தீய்ந்து போயிற்று என்பதனால் விளங்கும்.

நுழைவு, நோன்மை, நுண்மை மூன்றினையும் முறையே சமயம், விசேடம், நிருவாணம் எனவும் கூறலாம். இம் மூன்றும் பள்ளி வகுப்புப்போன்ற வளர்ச்சி முறையாகும். நுழைவு என்பது செந்நெறியினைக் கையேற்றல் ஆகும். இஃது இளம் மாணவர்கள் எல்லாரும் மேற்கொள்ளும் அத்துணை எளிமை வாய்ந்தது. நோன்மை என்பது அந் நெறியின்கண் இயங்குதலாகும். இது கலைமாணவரும் அலுவலாளர்களும் மேற்கொண்டொழுகும் தகையது. நுண்மை என்பது புலமையாளரும் பொய்யில் பெரியோர்களும் மேற்கொண்டு ஒழுகும் பொற்பினது. அதனல் இஃது எழிலாதல் எனப்படும். இவற்றுக்கு வேண்டுவன மூவர் திருநெறிய தமிழ்த் திருப்பதிகங்கள் ஆறு, திருவாசகத் திருவெம்பாவை ஒன்று, சேக்கிழார் அடிகள் அருளிய பெரியபுராணத்துத் திருஞானசம்பந்த நாயனர் திருவரலாற்றுள் காணப்படும் திருப்பாசுர விளக்கம் ஒன்று, ஆக எட்டுத் திருப்பதிகங்களேயாம்.

"ஏற்றல் இயங்கல் எழிலாதல் ஆம்நுழைவோ
டாற்றுநோன் மைநுண்மை ஆம்."

இத் தீக்கை மேலும் காண்டல், கருதல், தீண்டல், கட்டுரைத்தல் என நான்கு வகைப்படும். காண்டல்—(நோக்கம்) பார்வை. கருதல்—பாவனை. தீண்டல்—தொடுதல். கட்டுரைத்தல்—உபதேசம். ஆளுடைய நம்பியாராகிய நம்பியாரூரருக்குக் காண்டலும், கருதலும், தீண்டலும் முறையே தடுத்தாட்கொண்டது முதல் தொடர்ந்து நிகழ்ந்துள்ளன. அவை முறையே திருவெண்ணெய்நல்லூர், திருத்துறையூர், திருவதிகை வீரட்டானப்புறம்பணைச் சித்தவடமடம் என்னும் திருவூர்களிலே ஆகும். ஆளுடையரசர்க்குத் திருவடி சூட்டியருளிய திருநல்லூரிலும், ஆளுடைய பிள்ளையார்க்குத் திருப்பிரமபுரத்தும், ஆளுடைய அடிகளுக்குத் திருப்பெருந்துறையிலும், கண்ணப்பர்க்குக் காளத்தியிலும் சிவபெருமானே ஆற்றித் தீக்கை செய்தருளினர்.

ஆசிரியர் இயல்பு

திருமுறை அன்பும் சிவநெறிப் பண்பும் நல்லொழுக்கமும் வாய்ந்தவராய்க் காலத்தானும் சீலத்தானும் முதியவராய் உள்ள ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்ரேர் இச் சிவதீக்கை செய்துவைக்கும் தன்மையராவர். செய்யும் முறை: பிள்ளையார், நெல்நிறைநாழி, நீர்க்கலயம், திருவிளக்கு முதலிய நான்கு திருவுருவங்களை முறையே வழிபட்டும் வழிபடச் செய்தும் தீக்கை செய்து வைத்தல் வேண்டும். இச் சிவதீக்கைப் பேறுடையாரே சிவலிங்க முதலிய திருவுருவங்களைப் பூசையிடத்து அமைத்து வழிபடுதற்கும் அதனல் பெரும்பயன் எய்துதற்கும் உரியராவர்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

ஓம்
திருச்சிற்றம்பலம்

# சிவ தீக்கை

## [திருமுறை வழி]

---

### க. நுழைவு

திருச்சிற்றம்பலம்

க. திருநீறு பெறுதல் :

“ திருநாவுக் கரசர் செய்ய
பூவடி வணங்கக் கண்டு
புனிதநீறு அளித்தார் அன்றே.” —கஉ. அப்பூதி-௩௬.

என அன்புடன் ஓதித் திருநீற்று மடலைக் கைகூப்பி எடுக்க.

உ. திருநீறு பூசுதல்:

‘சிவ சிவ’ என ஓதி நெற்றிப் புருவத்து நடுவில் ‘ஓம்’ என்று திருநீற்றால் வரைக. கொப்பூழிலிருந்து கழுத்து வரையிலும், இரு கைகளிலும் மணிக்கட்டிலிருந்து தோள்வரையிலும் திருநீற்றால் சிறிய நேர் கோடு இழுக்க. இதுவே சாம்பற் பூச்சு. சாம்பற் பூச்சு—உத்தூளனம்.

௩. சிவகுரு வணக்கம் :

“ குருவே சிவமெனக் கூறினன் ” போற்றி.

௪. கடவுள் வணக்கம் :

“ கல்ஆல் நிழல்மலைவு
இல்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.” —சிவஞா. மங்க-க.

ரு. திருஅருட்புனல் :

"நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் காண்க"

—அ. திருவண்-உரு.

என ஓதிக்கொண்டு கைகூப்பி அக்குவளைப் புனலினை இரு கையாலும் தொடுக.

சு. திருவருள் நீறு :

"நீற்றோடு தோற்ற வல்லோன் போற்றி"

—அ. திருவண்-கo-அ.

என ஓதிக்கொண்டு கைகூப்பி வலக்கையால் திரு வெண்ணீற்றை எடுத்து இடது உள்ளங்கையில் வைக்க.

எ. திருவருள்நீறு குழைத்தல் :

"நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி"

—அ. போற்-கரு அ.

என ஓதிக்கொண்டு வலக்கையால் தண்ணீரை எடுத் துத் திருவெண்ணீற்றில் இட்டுக் குழைக்க.

அ. திருஅருள் நீறு அணிதல் :

குழைத்த திருநீற்றை வலக்கை நடு மூன்று விரல் களால் "திருச்சிற்றம்பலம்" என்று ஓதிக்கொண்டு உச்சியில் ஒரு அங்குல நீளம் வைக்க. "மந்திரமா வது நீறு" என ஓதிக்கொண்டு நெற்றியில் இரு கடைப்புருவம் வரையும் இடப்புறமிருந்து இடுக. அப்படியே ஓதிக்கொண்டு மார்பில் ஆறு அங்குல மும், கொப்பூழ் இரு முழந்தாள்களில் ஒவ்வோர் அங்குலமும் இடுக. வலத்தோளில் ஆறு அங்குல மும், வலமுழங்கை மணிக்கட்டுகளில் ஒவ்வோர் அங்குலமும் இடுக. அப்படியே இடக்கையிலும் இடுக. இரண்டு காதுகளிலும் இடுக. இவ்விடங் களில் இடும்போதெல்லாம் "மந்திரமாவது நீறு"

எனவே ஓதிக்கொள்க. பின் "திருச்சிற்றம்பலம்" என ஓதிக்கொண்டு ஒவ்வோர் அங்குலம் கழுத்தடியிலும், முதுகந்தண்டின் அடியிலும் இடுக. உச்சி, நெற்றி, மார்பு, கொப்பூழ், முழந்தாள் இரண்டு, இரு கைகளிலுமுள்ள தோள் முழங்கை மணிக்கட்டுகள் ஆறு, காது இரண்டு, கழுத்து, முதுகந்தண்டின் அடி ஆகத் திருஅருள் நீறு அணிய வேண்டிய இடங்கள் பதினாறு. இப்பதினாறும் இறைவனின் புறத்திருத்தொண்டாம். பதினாறினையும் முறை தவறாத நிறையன்புடன் இயற்றற்கே இவ்வுடல் என்னும் எழிற்குறிப்பாகும். அவை வருமாறு:

க. "ஒழுக்கம், உ. அன்பு, ௩. அருள், ௪. ஆசாரம், ரு. உபசாரம், சு. உறவு, எ. சீலம், அ. தவம், கூ. தானம், க0. வந்தித்தல், கக. வணங்கல், கஉ. வாய்மை, க௩. துறவு, க௪. அடக்கம், கரு. அறிவு, கசு. அருச்சித்தல் என்பன. (சிவஞான சித்தியார், உ. ௩ - உ௩.)

ஆசாரம் - நன்னடை. உபசாரம் - பணிவிடை. வந்தித்தல் - வழிபாடு. துறவு - கற்புநிறை. அருச்சித்தல் - பூசனை.

சு. திருஅருட்புனல் மும்முறை பருகல்:

திருவெண்ணீற்றுக் கையைக் கழுவிக் குவளை நீரினூற்றி உடல்மெய் இருபத்து நான்கும் உரம்பெற அருள்க. உணர்வுமெய் ஏழும் ஒண்மையுற அருள்க. உணர்த்துமெய் ஐந்தும் ஊக்குவிக்க அருள்க. என ஓதிக்கொண்டு ஒவ்வொரு முறையும் வலது உள்ளங்கையில் சுண்டுவிரல் ஒழிந்த நான்கு விரல்களையும் ஒன்றாய் இணைத்துச் சாய்த்துக் குழிந்த உள்ளங்கையில் உழுந்து அழுந்தும் அளவு புனல் விட்டு உட்பருகுதல் வேண்டும். இது முப்பத்தாறு மெய்களின் உண்மை யுணர்தலாகிய தூய்மை ஆகும்.

௧௰. திருஉறுப்புத் தொடுதல் :

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும்" தந்தான் தாள் போற்றி.

—ரு. ௬௦-எ.

என ஓதிக் கைகூப்பித் தலைவணங்குக.

இஃது அருளால் பெற்ற இவ்வுடலால் இறைவனின் அகத்திருத்தொண்டியற்றும் முறைமை குறிப்பதாகும்.

௧௧. திருஐந்தெழுத் தெண்ணல் :

"நமசிவய" என்னும் திருஐந்தெழுத்தைக் குறைந்தது பதினொரு உரு மெல்லென மனத்துள்ளே எண்ணுக. இங்ஙனம் எண்ணுதற்கு 'மணி' வடம் சிறந்தது. இல்லையானால் வலக்கைப் பெருவிரலால் வலக்கை அணிவிரல் நடுவரை, அடிவரை, சுண்டுவிரல் அடிவரை நடுவரை முடிவரை, அணிவிரல் முடிவரை, சுட்டுவிரல் முடிவரை நடுவரை அடிவரை இவைகளை 'நமசிவய' என ஓதிக்கொண்டு தொட ஒன்பது எண்ணிக்கையாகும்; பின் சுட்டுவிரலால் பெருவிரலின் முடிவரை அடிவரைகளைத் தொடப் பதினொன்று ஆகிவிடும். இங்ஙனம் எண்ணிவரும் முறையினை ஓர் உருவ அமைப்பில் உருவகம் செய்யின் ஓம் என்னும் வடிவம் அமையும். சுட்டுவிரல் ஆவியையும், பெருவிரல் விழுமிய முழுமுதல்வனையும் குறிப்பனவாகும். பெருவிரலின் முடிவரை வழிப்பேற்றினையும், அடிவரை விழுப்பேற்றினையும் குறிப்பனவாம். சுண்டுவிரல் அன்பினையும், அணிவிரல் அறிவினையும், சுட்டுவிரல் ஆற்றலினையும் குறிப்பனவாகும். கொள்ளப்படாத நடுவிரல் மலம் மாயை கன்மங்களைக் குறிப்பனவாம். மணி—கண்டிகை; உருத்திராக்கம்.

கஉ. திருஐந்தெழுத்து ஓதுதல் :

“ நற்றவாஉனை நான்மறக்கினும்
சொல்லும்நா நமச்சிவாயவே.” —எ. சஅ-க.

கங. திருஅடியார்ப் போற்றல் :

“ பத்தராய்ப் பணிவார்கள்
எல்லார்க்கும் அடியேன்.” எ. ஙகூ-க0.

கச. திருஅடிபோற்றுதல் :

“ ஆலமர நீழலறஞ்
சொன்னாய் போற்றி.”*  —கூ. ஙஉ-உ.

கரு. வேண்டுகோள் :

“ பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடும்
கூரி தாய அறிவுகை கூடிடும்
சீரி யார்பயில் சேறையுட் செந்நெறி
நாரி பாகன்தன் நாமம் நவிலவே.” —ரு. எஎ-க.

அந்தணர் சான்றோர் தந்தைதாய் உடன்பிறந்தோர் வாழ்க;
மழைவாழ்க, வளம்வாழ்க, மன்னுயிர்கள் வாழ்க,
கலைவாழ்க, கற்பிப்பார் வாழ்க, கடவுள்நெறி வாழ்க,
தமிழ் வாழ்க, முறை வாழ்க, தமிழகம் வாழ்க,
திருநெறி சிவநெறி தேசமெலாம் வாழ்க.

கசு. திருவடிக்கு ஆக்கல் :

ஆண்டான் அடிமறவா அருஞ்செயலே அன்பின்பு என ஓதிப் பூப்புனலை இருகையாலும் மும்முறை வார்க்க.

கஎ. வாழ்த்து :

“நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க.”
—அ. சிவ-க.

---

* ஆலமர் செல்வர் - சிவபெருமான்; தென்முகத் தெய்வம்,—சிறுபாண். கசு - கூ.

## உ. நோன்மை

௧. திருநீறு பெறுதல்:

"பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழல்எம்மால் போற்ற லாமே"

—௧௨. மங்கை-௯.

௨. திருநீறு பூசுதல்:

முன் (5) நுழைவிற்குக் கூறியாங்கு அமைத்துக் கொள்க.

௩. சிவகுரு வணக்கம்:

"திருவ னேதிரு வீழி மிழலையுள்
குருவ னேஅடி யேனைக் குறிக்கொளே."

—௫. ௧௩-௫.

௪. கடவுள் வணக்கம்:

"ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்புவெண் தாமரை
பாடும் திருமுறை பார்ப்பதி பாதங்கள்
சூடுமின் சென்னிவாய்த் தோத்திரம் சொல்லுமே."

—௧0. ௧0௬௭.

௫. திருவருட்புனல்:

"எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவின்" புனல்போற்றி.. —அ. திருஎம்-௧௩.

௬. திருவருள் நீறு: (6)

"அவன்தோள் பூசுஅத் திருநீறு" போற்றி.

—அ. திருக்கோ-௧0௬.

௭. திருவருள் நீறு குழைத்தல்: (6)

"அருள்நோக்கால் தீர்த்தநீர் ஆட்டிக் கொண்டாய்."

—௬. ௧௫-அ.

அ திருஅருள் நீறு அணிதல் :

க. உச்சி : திருச்சிற்றம்பலம், உ. நெற்றி : மந்திரமாவதும் நீறு, ங. மார்பு : வேதத்தில் உள்ளதும் நீறு, ச கொப்பூழ் : முத்திதருவதும் நீறு, ரு, சு இருமுழந்தாள் : காணஇனியதும் நீறு, எ. வலத்தோள் : பூசஇனியதும் நீறு, அ. வலமுழங்கை : அருத்தமதாவதும் நீறு, கூ. வலமணிக்கட்டு : எயிலது அட்டதும் நீறு, க0. இடத்தோள் : இராவணன் மேலதும் நீறு, கக. இடமுழங்கை : மாலொடயனறியாத வண்ணமும் உள்ளதும் நீறு, கஉ. இடமணிக்கட்டு : குண்டிகைக் கையர்களோடு சாக்கியர் கூட்டமும் கூடக், கண் திகைப்பிப்பதும் நீறு, கங, கச. இரு செவிகள் : ஆற்றல் அடல் விடை ஏறும் ஆலவாயான் திருநீறு, கரு. கழுத்தினடி : திருச்சிற்றம்பலம், கசு. முதுகந்தண்டினடி : திருச்சிற்றம்பலம் என அன்புடன் ஓதிக்கொண்டு முன் (6) போல் திருநீறு இடுக.

கூ திருவருட்புனல் மும்முறை பருகல் :

நாலாறுண்மை போற்றி, எழ்மெய் போற்றி, ஐந்தாம் அறிவு போற்றி.

க0. திருஉறுப்புத் தொடுதல் :

க. உச்சி : "தலைவனைத் தலையே நீ வணங்காய்.

உ. கண்கள் : கண்டன்தன்னைக் கண்காள் காண்மின்களோ.

ங. செவிகள் : பிரான்திறம் எப்போதும் செவிகாள் கேண்மின்களோ.

ச. மூக்கு : முக்கணனை மூக்கே நீ முரலாய்.

ரு. வாய் : பிரான்தன்னை வாயே வாழ்த்துகண்டாய்.

சு. நெஞ்சு : நின்மலனை நெஞ்சே நீ நினையாய்.

எ. கைகள் : பரமனைக் கைகாள் கூப்பித்தொழீர்.

அ. ஆக்கை : அரனைப்போற்றி என்னாத இவ் ஆக்கையாற் பயனென்.

௯. கால்கள் : கோகரணம் சூழாக் கால்களாற் பயனென்.

௧௦. இறை : கூத்தனல்லால் நமக்கு உற்றார் யாருளரோ.

௧௧. உயிர் : சேவடிக்கீழ்ச்சென்று இருமாந்து இருப்பன் கொலோ.

௧௨. தளை : தேவனை என்னுளே தேடிக் கண்டு கொண்டேன்." —௪. ௯-௧-௧௨.

ஒவ்வொரு திருக்கண்ணியையும் தனித்தனியாக அன்புடன் ஓதி வலக்கைப் பெருவிரல் நுனியை அணிவிரல் நடுவரையிற் சேர்த்து மற்றைய விரல்களை நீக்கி ஒன்பது திரு உறுப்புக்களையும் தொடுக. இவற்றுள் எட்டாவதெண்ணுகிய ஆக்கையைத் தொடுங்கால் இரு கைவிரல்களையும் தனித்தனி இணைத்துச் சிறிது குவித்துத் தலைமுதல் கால்வரை சுட்டி நெஞ்சின் நேர் வைத்துக் கும்பிடுக. ௧௦, ௧௧, ௧௨. திருக்கண்ணிகளை அன்புடன் ஓதிக் கைகள் இரண்டையும் உச்சிமேற் குவித்துத் தொழுக. இம் மூன்றும் முப்பொருள் உண்மை குறிக்கும் குறிப்பாகும்.

௧௧. திரு ஐந்தெழுத் தெண்ணல் :

"சிவயநம" என்னும் திரு ஐந்தெழுத்தை (8) முன்குறித்தாங்குக் கணிக்க.

௧௨. திரு ஐந்தெழுத்தோதுதல் :

"நானேயோ தவஞ்செய்தேன்
சிவாயநம எனப்பெற்றேன்." -அ திருவே-௧௦.

௧௩. திருஅடியார்ப் போற்றல் :

"பரமனையே பாடுவார்
அடியார்க்கும் அடியேன்." —எ. ௩௯-௧௦.

கச. திருவடி போற்றல் :

“ நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளேன் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவன் ஆவடு தண்துறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே.” —க0. எஅ.

கடு. வேண்டுகோள் :

“மண்ணின்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணின்நல் லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணின்நல் லஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணின்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே.”
—ந. உச-க.

அந்தணர் வாழ்க; ஆன்றோர் வாழ்க; ஆனினம் வாழ்க; மழை வாழ்க; மாநிலத் தலைவர் வாழ்க; அரன்நாமம் வாழ்க; அனைத்துலகும் வாழ்க.

கசு. திருவடிக்கு ஆக்கல் :

“கண்காணி யாகவே கையகத் தேஎழும்
கண்காணி யாகக் கருத்து ளிருந்திடும்
கண்காணி யாகக் கலந்து வழிசெய்யுங்
கண்காணி யாகிய காதலன் தானே.” —க0-உ0எஉ.

கஎ வாழ்த்து :

“ இமைப்பொழுதும் என்நெஞ்சில்
நீங்காதான் தாள்வாழ்க.” அ. சிவபு-வரி உ.

## ௩. நுண்மை

௧. திருநீறு பெறுதல் :

“என்றபொழு தவரருளை எதிரேற்றுக் கொண்டிறைஞ்ச
நின்றதபோ தனியாரும் நின்மலன்பேர் அருள்நினைந்து
சென்றுதிரு வீரட்டம் புகுவதற்குத் திருக்கயிலைக்
குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்தோதிக்
[கொடுத்தார்.”—௧௨. திருநா-௬௬.

௨. திருநீறு பூசுதல் :

“திருவாளன் திருநீறு திலகவதி யாரளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்
உருஆர அணிந்துதமக்கு உற்றஇடத்து உய்யுநெறி [றங்கு
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார்.”
௧௨. திருநா-௬௭.

௩. சிவகுரு வணக்கம் :

“தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே.” —௧0. ௧௩௬.

௪. சிவப்பொரு துணர்தல் :

“காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையின்
தாங்குருவே போலும் சடைக்கற்றை மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு.”
—௧௧ காரை. அற்பு-௬௫.

௫. கடவுள் வணக்கம்

“படைக்கல மாகஉன் நாமத் தெழுத்தஞ்சென்
[நாவிற்கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப் பும்உனக்
[காட்செய்கின்றேன்

'துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித்
[தூநீறணிந்துன்
அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச் சிற்றம்
[பலத்தரனே.''
—௪. அக-அ.

போற்றுபுகழ் நூலும் பொருள்நூலும் நாமுய்யப்
போற்றியருள் மெய்யர்தாள் போற்று.

எ. திருவருட்புனல் :

"ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
இப்பிறவி அறுத்தேற வாங்கி ஆங்கே
கூவியம ருலகனைத்தும் உருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலும்
தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே."
சு. எரு-க0.

காவிரியே பெண்ணையம ராவதி பொன்முகலி
மேவு பொருநை மிளிர்வையை—தாவில்கம்பை
கொள்ளிடம்பா லிக்கெடிலம் கூறுமண்ணி முத்தாறு
வெள்ளாறு கங்கைநிவா மேவு.

அ. திருவருள் நீறு : (6)

"கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமற் பூச மகிழ்வரே ஆமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே." —க0. கசுசுசு.

௯. திருவருள் நீறுகுழைத்தல்: (6)

"தாரார் கொன்றை பொன் தயங்கச் சாத்திய மார்பகலம்
நீரார்நீறு சாந்தம் வைத்த நின்மலன் மன்னும்இடம்
போரார் வேற்கண் மாதர்மைந்தர் புக்கிசை பாடலினால்
பாரார் கின்ற பட்டினத்துப் பல்லவன் ஈச்சரமே."

—க. ௬௫-௪.

௰. திருவருள் நீறு அணிதல்:

க. உச்சி: "*திருச்சிற்றம்பலம்.*"

உ. நெற்றி:

"மந்திர மாவதும் நீறு வானவர் மேலதும் நீறு
சுந்தர மாவதும் நீறு துதிக்கப் படுவதும் நீறு
தந்திர மாவதும் நீறு சமயத்தில் உள்ளதும் நீறு
செந்துவர் வாய்உமை பங்கன் திருஆலவா யான்திரு நீறே.

க. ௬௬-க.

ங. மார்பு:

வேதத்தில் உள்ளதும் நீறு வெந்துயர் தீர்ப்பதும் நீறு
போதந் தருவதும் நீறு புன்மை தவிர்ப்பதும் நீறு
ஓதத் தகுவதும் நீறு உண்மையில் உள்ளதும் நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆலவா யான்திரு நீறே. உ

௪. கொப்பூழ்:

முத்தி தருவதும் நீறு முனிவர் அணிவதும் நீறு
சத்தியம் ஆவது நீறு தக்கோர் புகழ்வதும் நீறு
பத்தி தருவதும் நீறு பரவ இனியதும் நீறு
சித்தி தருவதும் நீறு திருஆலவா யான்திரு நீறே. ங

ரு, ௬. முழந்தாள்கள்:

காண இனியதும் நீறு கவினைத் தருவதும் நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பதும் நீறு
மாணந் தகைவதும் நீறு மதியைத் தருவதும் நீறு
சேணந் தருவதும் நீறு திருஆலவா யான்திரு நீறே. ௪

௭. வலத்தோள் :

பூச இனியதும் நீறு புண்ணிய மாவதும் நீறு
பேச இனியதும் நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பதும் நீறு அந்தம தாவதும் நீறு
தேசம் புகழ்வதும் நீறு திருஆலவா யான்திரு நீறே. ௫

௮. வலமுழங்கை :

அருத்தம தாவதும் நீறு அவலம் அறுப்பதும் நீறு
வருத்தம் தணிப்பதும் நீறு வானம் அளிப்பதும் நீறு
பொருத்தம தாவதும் நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆலவா யான்திரு நீறே. ௬

௯. வலமணிக்கட்டு :

எயிலது அட்டதும் நீறு இருமைக்கும் உள்ளதும் நீறு
பயிலப் படுவதும் நீறு பாக்கியம் ஆவதும் நீறு
துயிலைத் தடுப்பதும் நீறு சுத்தம தாவதும் நீறு
அயிலைப் பொலிதரு சூலத்து ஆலவா யான்திரு நீறே. ௭

௧௦. இடத்தோள் :

இராவணன் மேலதும் நீறு எண்ணத் தகுவதும் நீறு
பராவணம் ஆவதும் நீறு பாவம் அறுப்பதும் நீறு
தராவணம் ஆவதும் நீறு தத்துவம் ஆவதும் நீறு
அராஅணங் கும்திரு மேனி ஆலவா யான்திரு நீறே. ௮

௧௧. இடமுழங்கை :

மாலொடு அயனறி யாத வண்ணமும் உள்ளதும் நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பம் தருவதும் நீறு
ஆலமது உண்ட மிடற்றெம் ஆலவா யான்திரு நீறே. ௯

கஉ. இடமணிக்கட்டு :

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்திகைப் பிப்பதும் நீறு கருத இனியதும் நீறு
எண்திசைப் பட்ட பொருளார் ஏத்தும் தகையதும் நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆலவா யான்திரு நீறே.

கங, கச. இரு செவிகள் :

ஆற்றல் அடல்விடை ஏறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னன்உடல் உற்ற தீப்பிணி யாயினதீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே."

கரு, கசு. கழுத்தின் அடியும்
முதுகந்தண்டின் அடியும் :
"திருச்சிற்றம்பலம்"

கக. திருஅருட்புனல் மும்முறை பருகல் :

"அறுநான்க சுத்தம் அதிசுத்தா சுத்தம்
உறும்எழும் மாயை உடன்ஐந்தே சுத்தம்
பெறுமா றிவைமூன்றும் கண்டத்தாற் பேதித்து
உறுமாயை மாமாயை ஆன்மாவி னேடே."

—சo. உஉசுஎ.

போற்றிநா லாறுண்மை போற்றிஏழ் மெய்அன்பு
போற்றிஐந் தாம்அறிவு போற்று.

*உண்மை - தத்துவம். மெய் - தத்துவம். நாலாறு - இருபத்து நான்கு; இம் மூன்றும் முறையே உடல் மெய், உணர்வுமெய், உணர்த்துமெய் என்ப. இவற்றை ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் எனவுங் கூறுப. ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு, வித்தியா தத்துவம் ஏழு, சிவ தத்துவம் ஐந்து ஆக அருஞ்சைவர் தத்துவம் முப்பத்து ஆறு.*

கஉ. திருஉறுப்புத் தொடுதல் :

க. உச்சி :

“ தலையே நீவணங்காய்—தலை
மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேரும் தலைவனைத்
தலையே நீவணங்காய். —ச. கூ-க

உ. கண்கள் :

கண்காள் காண்மின்களோ—கடல்
நஞ்சுண்ட கண்டன் தன்னை
எண்தோள் வீசிநின் றாடும்பி ரான்தன்னைக்
கண்காள் காண்மின்களோ. உ

௩. செவிகள் :

செவிகாள் கேண்மின்களோ—சிவன்
எம்இறை செம்பவழ
எரிபோன் மேனிப்பி ரான்திறம் எப்போதும்
செவிகாள் கேண்மின்களோ. ௩

ச. மூக்கு :

மூக்கே நீமுரலாய்—முது
காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கைம ணாளனை
மூக்கே நீமுரலாய். ச

ரு. வாய் :

வாயே வாழ்த்துகண்டாய்—மத
யானை உரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்தன்னை
வாயே வாழ்த்துகண்டாய். ரு

௬. நெஞ்சு :

நெஞ்சே நீநினையாய்—நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கைம ணாளனை
நெஞ்சே நீநினையாய். ௬

௭. கைகள் :

கைகாள் கூப்பித் தொழீர்—கடி
மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை ஆர்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர். ௭

௮. ஆக்கை :

ஆக்கை யாற்பயனேன்—அரன்
கோவில் வலம்வந்து
பூக்கையால் அட்டிப் போற்றிஎன் னாதஇவ்
ஆக்கை யாற்பயனேன். ௮

௯. கால்கள் :

கால்க ளாற்பயனேன்—கறைக்
கண்டன் உறைகோவில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக்
கால்க ளாற்பயனேன். ௯

௧௦. இறை :

உற்றார் யாருளரோ—உயிர்
கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தன்அல் லால்நமக்கு
உற்றார் யாருளரோ. ௧௦

கக. உயிர் :

இறுமாந்து இருப்பன் கோலோ—ஈசன்
பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமான் ஏந்திதன் சேவடிக் கீழ்ச்சென்று
இறுமாந்து இருப்பன்கோலோ. கக

கஉ. தலை :

தேடிக் கண்டுகொண்டேன்—திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணுத் தேவனை என்னுளே
தேடிக் கண்டுகொண்டேன்.'' கஉ

—ச. கூ-க-கஉ.

[திருவெண்ணீறணியும் இடம் பதினாறு. இஃது 'ஒழுக்கம் முதல் அருச்சித்தல்' ஈறாகவுள்ள பதினாறு உலகியற் சிவத் தொண்டைக் குறிக்கும். தொடுமிடம் ஒன்பதும் 'தலைமுதல் கால்கள்' ஈறாக வுள்ள இறையுடைமையாம் திருஉறுப்புக்களால் இன்றியமையாது இயற்றப்பெற வேண்டிய திரு வடிச் சிவத் தொண்டினைக் குறிக்கும் :

“ஒழுக்கமன் பருளா சாரம் உபசாரம் உறவு சீலம்
வழுக்கிலாத் தவந்தா னங்கள் வந்தித்தல் வணங்கல்
[வாய்மை
அழுக்கிலாத் துறவ டக்கம் அறிவோடர்ச் சித்தல் ஆதி
இழுக்கிலா அறங்கள் ஆனல் இரங்குவான் பணிஅ
[றங்கள் ''—சித்தி. உ. உ-உரு.

தொடும் இடம் கண்ணி க0 - இல் கூத்தனுரையும், கக - இல் சேவடிக்கீழ் இருத்தலையும், கஉ - இல் மாலொடு நான்முகன் தேடொணுத் தன்மையினை யும் குறித்தருளப் பெற்றமையால் முறையே பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மை செப் பும் திருக்குறிப்பாகும்.]

கங. திருஐந்தெழுத்தெண்ணல் :

"சிவயசிவ" என்னும் திருஐந்தெழுத்தை (8) முன்பு போற் கணிக்க.

கச. திருஐந்தெழுத்து ஓதுதல் :

"மற்றுப்பற்றெனக் கின்றிநின் திருப்
பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேனினிப்பிற
வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினும்
சொல்லும்நாநமச் சிவாயவே." —எ. சஅ-க.

கரு. திருஅடியார்ப் போற்றல் :

"தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க்கு அடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்தன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற்கு அடியேன்
அல்லிமென் முல்லை அம்தார் அமர்நீதிக்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே."—எ. ௩௯-க.

கசு. மெய்ந்நெறி தேற்றல் :

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதுஎல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக மும்துயர் தீர்கவே." —௩. ருச-க.

கஎ. மெய்ப்பொருள் போற்றல் :

"கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லும் கதியே போற்றி
அற்றவர்கட்கு ஆரமுதம் ஆனாய் போற்றி
அல்லல்அறுத்து அடியேனை ஆண்டாய் போற்றி
மற்றொருவர் ஒப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி
செற்றவர்தம் புரம்எரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி."—சு. ௬௨-அ.

கஅ. மெய்ப்பொருள் விளைவு :

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னேஎன்னே
ஈதேஎம் தோழி பரிசேலோர் எம்பாவாய்."-அ. திருஎம்-க.

கசு. மெய்ப்பொருள் விளக்கம் :

"அந்தணர் தேவர்ஆன் இனங்கள் வாழ்கஎன்று
இந்தமெய்ம் மொழிப்பயன் உலகம் இன்புறச்
சந்தவேள் விகள்முதல் சங்க ரர்க்குமுன்
வந்தஅர்ச் சனைவழி பாடு மன்னவாம்."
—கஉ. திருஞா-அஉக.

உ0. வேண்டுகோள் :

"ஆலமே அமுதம் ஆக உண்டுவா னவர்க்க ளித்துக்
காலனை மார்க்கண் டர்க்காக் காய்ந்தனை அடியேற்கின்று
ஞாலம்நின் புகழே யாக வேண்டும்நான் மறைகள் ஏத்தும்
சீலமே ஆல வாயில் சிவபெரு மானே என்றார்."
—கஉ. திருஞா-எ௪0.

உக. திருவடிக்கு ஆக்கல் :

"அன்றே என்தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னைஆட் கொண்ட போதே
[கொண்டிலையோ
இன்றோர் இடையூறு எனக்குண்டோ எண்தோள் முக்கண்
[எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே"
—அ. குழை-எ.

"அஞ்செழுத் தோதி அங்கி வேட்டுநல் வேள்வி எல்லாம்
நஞ்சணி கண்டர் பாதம் நண்ணிடச் செய்து ஞாலத்து
எஞ்சலில் அடியார்க்கென்றும் இடையறா அன்பால் வள்ளல்
தஞ்செயல் வாய்ப்ப ஈசர் தாள்நிழல் தங்கி னாரே."
—கஉ. சிறப்புலி-ரு.

உஉ. வாழ்த்து :

"கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க"

குறிப்பு: கச முதல் கக வரையுள்ள திருப்பதிகங்கள் ஆறும் திருமுறைகளில் காணப்படுவன. வாய்ப்புள்ளவர்கள் அவற்றை நாடோறும் முற்றாக ஓதி உய்தல் சிறப்பு. அல்லது நாளொன்றுக்கு ஒவ்வொரு திருப்பாட்டாக மீட்டும் மீட்டும் தொடர்ந்து ஓதி வருக.

கஎ. "போற்றித் திருத்தாண்டகம்" நான்கனுள் இஃதொன்றுமே நூற்றெட்டுப் போற்றித் திருமறைகளைக் கொண்ட திருப்பதிகம். ஏனையவை முறையே கக, அக, அக எண்களைக் கொண்டன. எனவே, இது நிரம்பிய வழிபாட்டு அருச்சனை குறிக்கும் திருப்பதிகம் ஆகும். அதனால், இத்திருப்பதிகம் ஓதித் திருக்கோவில்களில் திருமுறை அருச்சனை செய்தல் சிறப்பு.

கக. ஆம் விளக்கமாகிய திருப்பாசுர விளக்கம் பெரிய புராணத்துத் திருஞானசம்பந்தர் திருவரலாற்றில் திருப்பாட்டு அஉ0 - அசக வரை ஆம்.

திருச்சிற்றம்பலம்.

---



விலை அணா 1.

அப்பர் அச்சகம், சென்னை-1.